வைத்துப் பரிசிலனை செய்து, அன்றைக்கு இருக்கும் நிதி நிலைக்குத் தகுந்தபடி, இந்தப் பாலத்தை எடுத்துக்கொள்ள முடியுமென்றால், எடுத்து நிறைவேற்றுவதிலே கஷ்டம் இருக்காது.

*High schools (introduction of XI Standard)*

* 135 *Q*.—SRI V. KRISHNAMOORTHY : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government propose to introduce XI Standard in the high schools during current year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** 'இந்தப் புது முக வகுப்பை மாற்றிவிட்டு பதினோரும் வகுப்பைப் பள்ளியிலேயே ஆரம்பிக்கப் போகின்றோம்' என்று ஏற்கனவே அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது இருக்கின்ற நிலையில், 'பிரி யூனிவர்சிடி க்ளாஸி'லே அதிகமான நெருக்கடி இருப்பதும், 'டிக்ரி கோர்ஸி'ல் அதிகமான மாணவர்கள் வராததும் சர்க்காருக்குத் தெரியும். ஆகவே, இந்த நிலையை மாற்றியமைக்கின்ற முறையில், ப்ரீ யூனிவர்சிடி கோர்ஸையோ அல்லது மூன்று வருஷப் பட்டப் படிப்பையோ விட்டுவிட்டு, 'இன்டர்மீடியட், இரண்டு வருஷ பீ.ஏ. கோர்ஸ்' என்ற பழைய முறையை அரசாங்கம் மீண்டும் கொண்டுவர முன்வருமா ? யூனிவர்ஸிடி கூட இதுபோன்று அபிப்பிராயப்படுவது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** 'உயர்நிலைப் பள்ளிகளில் பதினோரும் வகுப்பைத் துவங்கும் உத்தேசம் இந்த ஆண்டில் உண்டா ?' என்ற கேள்விக்கு 'இந்த ஆண்டில் அப்படிப்பட்ட உத்தேசம் இல்லை' என்று நான் விடை அளித்தேன். ஆனால், நிரந்தரமாக எத்தகைய ஒரு சீர்திருத்தத்தை நிறைவேற்றுவது என்பது இப்பொழுது ஆலோசனையில் இருக்கிறது. இது சம்பந்தப்பட்டவர்களையெல்லாம் கலந்தாலோசித்து, இந்த ஆண்டு இறுதிக்குள் கல்விப் பிரச்னைகளைப் பொறுத்து நிரந்தரமான முடிவு காண வேண்டும் என்பது என்னுடைய அவா. அந்த வகையிலே கவனம் செலுத்திக்கொண்டு வருகிறேன். இதிலே யூனிவர்ஸிடியினுடைய அபிப்பிராயம் என்ன என்பது எனக்குத் தெரியாது. நான் அதைப்பற்றித் தெரிந்துகொள்ளவில்லை, இதுவரையிலும். பதினோருவது ஸ்டாண்டர்டு என்னும்போது முன்பு இருந்த பதினோருவது ஸ்டாண்டர்டு அல்ல, ப்ரீ யூனிவர்ஸிடி கோர்சுக்குப் பதிலாக ஹையர் செகண்டரி ஸ்கூல்களில் பதினோருவது ஸ்டாண்டர்டை வைப்பதில்லை என்று 16—11—1961-லே ஒரு உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. அதாவது,—

" The introduction of new XI Standard in 1962–63 has to be planned for from this year itself. At this juncture, Government have been confronted with certain problems involved in the change-over to the new scheme which were not sisualised fully at the time when the change was decided upon. There has also been a certain amount of rethinking on the subject in educational circles.

These matters therefore require to be reviewed by the expert bodies. Government have therefore decided after very careful consideration that the opening of Standard XI in Secondary Schools due in 1962–63 may be deferred.''

**திரு. மீ. கல்யாணசுந்தரம்:** முன்பு கல்வி அமைச்சராக இருந்தவர் ஒவ்வொரு ஜில்லாவிலும் இரண்டு ஹைஸ்கூல்களுக்குக் குறையாமல் 11-வது வகுப்பை ஏற்படுத்த வேண்டும் என்று திட்டமிட்டு உத்தரவிட்டிருந்தார்களே. அந்த உத்தரவை ஒத்திவைத்த காரணம் என்ன? எப்போது ஒத்திவைக்கப்பட்டது?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** நான் இப்போது வாசித்தது அந்த உத்தரவு தான். அதுவும் முன்பு கல்வி மந்திரியாக இருந்தவர் காலத்து இடப்பட்ட உத்தரவு தான் இது.

Sri R. V. SWAMINATHAN: Sir, in view of the importance of this matter, will the Hon. Minister give a chance to this House to discuss this matter?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: After all the exploratory talks with educational authorities and others concerned when we formulate certain proposals I will put them before the Educational Advisory Committee and then finally we will consult this House.

**திரு. சா. கணேசன்:** ப்ரீ யுனிவர்ஸிடி கோர்ஸ் என்று இருக்கிற வகுப்புக்கும் அதன் பெயருக்கும் பொருத்தமில்லாமல் இருக்கிறதே, இந்த வகுப்பை காலேஜில் தான் வைக்கவேண்டும், ஹைஸ்கூலில் வைக்கக் கூடாது, அதோடு இதற்கு வேறு பெயரையே கொடுப்பது உசிதமாக இருக்காதா என்று அறியவிரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** எனக்கு இப்போதுள்ள அபிப்பிராயம் நிபுணர்களின் யோசனையைக் கேட்டு அவர்கள் என்ன சொல்கிறார்களோ அதன்படி நடந்துகொள்வது என்பதுதான். ப்ரீ யுனிவர்ஸிடி கோர்ஸ் கல்லூரியில்தான் இருக்க வேண்டும், ஹைஸ்கூலில் இருக்கக் கூடாது என்பது என் அபிப்பிராயம். இதையெல்லாம் மாற்றின பிறகு பெயர் வைத்துக்கொள்ளலாம். பெயர் வைக்கக் காலம் வரவில்லை.

**சாலைகள்.**

*136 கேள்வி.—திரு. ஜே. மாதா கவுடர்: கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மொரக்குட்டி-எப்பனுடு வழியை தார் ரோடு போட எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டது?

(இ) எப்போது வேலை ஆரம்பிக்கப்படும்?

The Hon. Sri V. RAMAIAH: (*a*) No amount has been allotted for the work.

(*b*) Does not arise.